சாட்டைக் கம்புகளும், ஒரு வீட்டின் முன்னுல் நல்லதுக்கோ கெட்டதுக்கோ போடப்பட்டிருந்த பந்தல் கம்புகளும் கூட்டத்தினரின் கரங்களுக்கு வந்து விட்டன. கண் திறந்து கண் மூடுவதற்குள் கூட்டம் கண் மண் தெரியாமல் ஓடி காவல் நிலையத்தை சுற்றி வளைத்துக் கொண்டது. கையில் இருந்த கல்லாயுதங்களையும், கம்பாயுதங்களையும் நீட்டி நீட்டி, தூக்கித் தூக்கி, 'ஏய்...ஏய்...' என்ற குரல்கள். 'முத்துலிங்கத்தை கைது செய்யாமல்...கொஞ்சுறதா' என்ற அதட்டல்கள்.

இதை சற்றும் எதிர்பாராத போலீசார், உள்ளே ஓடிஞர்கள். முத்துலிங்கமும், அவர்களோடு ஒட்டிக் கொண்டு, உள்ளே ஓடிஞர். வழி மறிக்கப்போன போலீசாரும், பாதி வழியில், திரும்பிப் பார்க்காமலே ஓடி, காவல் நிலையத்திற்குள் ஓடிஞர்கள். திடீரென்று, காவல் நிலையக் கதவுகள் சாத்தப்படுகின்றன. ஜன்னல்கள் ஒடுக்கப் பட்டு, துப்பாக்கி முனைகள் தெரிகின்றன.

வழியில் இதர பெண்களோடு திகைத்து நின்ற தமிழரசியின் காதில் 'எப்பதம் வாய்த்திடும் போதும்—அதை யாவர்க்கும் பொதுவில் வைப்போம்' என்று பாரதி கொக்கரிக்கிருன். உடனே அவள் பெண்களை கை காட்டி அழைத்தபடியே, காவல் நிலையம் நோக்கி ஓடுகிருள். பாதி வழியில் மீளத் தெரியாமல் நின்ற கலாவதியை இழுத்துக் கொண்டே ஓடி கூட்டத்தில் சேர்கிருள். திடீரென்று பயங்கரமான சத்தம்...

'டுமீல்...டுமீல்...டுடுடு.. டுமீல் டுமீல்!'

எறியப்பட்ட கற்களுக்குப் பதிலாக, இரும்பு புல்லாங் குழல் போல் தோன்றிய, ஜன்னலோர துப்பாக்கி முனை களின் பேய் வாய் வழியாய், உருண்டை உருண்டையாய், வட்ட வட்டமாய் ஈயப்பொருட்கள், ராக்கெட் வேகத்தில் வெளிப்படுகின்றன. மூன்று பேர், அடியற்றுக் கீழே விழு கிருர்கள். தலையில் சிறு துவாரத்தின் வழியால் ரத்தம் பீறிட, பிடரியில் பெருச்சாளிப் பொந்துபோல் மூளை

சிதற, அவர்கள் முனங்கக் கூட நேரமின்றிச் சாய்கிறார்கள். இந்த மூவரின் முதல்வியாய், தலையில் ரத்தம் நீரூற்றாய் மேலோங்க, கலாவதி 'எய்யோ... எய்...' என்றபடி மல்லாந்து கிடக்கிறாள். தமிழரசிக்கு எதுவுமே நினைவில்லை. யார் விழுந்தார் என்ற பிரக்ஞை இல்லை. கீழே கிடந்த காலாவதியான கலாவதியின் ஒரு கையைத்தூக்கியபடியே, அவள் கலாவதி என்பதை உணராமலே தூக்கித் தோளில் போட்டபடி அரிவாளை வீசப்போன வினைதீர்த்தானின் ஒரு கையையும் பற்றியபடி செத்தவளுக்கும், இன்னும் சாகாமல் நிற்பவனுக்கும் இடையே அவள் இழுபட்டாள். பிறகு கலாவதியை விட்டுவிட்டு, வினைதீர்த்தானைப் பின்னுக்குத் தள்ளி காவல் நிலையத்தின் முன்னால் துப்பாக்கிக் காலனின் நேரடிப் பார்வையில் மேனியைக் காட்டியபடி அடங்கிப்போக முடியாத—அடக்க முடியாத—ஆவேசியாகிறாள். அவள் கழுத்து துப்பாக்கிபோல் நிற்கிறது. வாய் அக்கினிக்குழம்பை கக்குகிறது.

"சுடுங்கடா! என்னோடு சேர்த்து எத்தனைபேரை வேண்டுமானாலும் சுடுங்கடா! சுட்டுத் தொலைங்கடா! தன் மானத்தை விட்டுக் கொடுத்து, நாங்க சுதந்திரத்தை அனுபவிக்கத் தயாராய் இல்லை. உம்... சுடுங்கடா! காலம் ஒங்களை சுடுமுன்னால எங்களை காலனிடம் அனுப்புங்கடா!"

சிதறிய கூட்டம் மீண்டும் அணிவகுத்து, காவல் நிலையத்தை நெருங்குகிறது. அதோடு வேடிக்கை பார்ப்பது போல் நின்ற கூட்டம் தோள் கொடுக்கிறது. மூட்டை தூக்கிகள், வாடகை வண்டி ஓட்டிகள், சைக்கிள் ரிக்ஷாக் காரர்கள் கூட்டத்தை கும்பலாக்குகிறார்கள். குற்றாலத் திற்கு, ஜமாபந்திக்குப் போய்க்கொண்டிருந்த அதிகாரி களின் கார்கள், காவல் நிலையத்தை நோக்கி நகர்கின்றன.

ஆட்சித் தலைவரும், மாவட்ட காவல்துறைத் தலை வரும் வந்தாலும் வரலாம் என்று அனுமானித்து அவர் களுக்கு துப்பாக்கிகள் சகிதமாய் அணிவகுப்பு வரவேற்புக் கொடுக்கத் தயாராய் இருந்த போலீஸ்காரர்களும்,

சப்இன்ஸ்பெக்டரும், செய்வதறியாது திகைக்கிறார்கள். துப்பாக்கிகள் ஆடாமல் கிடக்கின்றன. கூட்டம் மீண்டும் சூழ்கிறது.

தமிழரசியோ, கலாவதியின் சடலத்தை தோளில் போட்டபடி ஆயிரம் கால்கள் கொண்ட ஆதிபரா சக்தியாய் அங்குமிங்கும் நடமாடுகிறாள். ஆயிரம் வாய் கொண்ட அபூர்வ சிந்தாமணியாய் கத்துகிறாள், பதைக்கிறாள்.

"சுடுங்கடா... சுட்டுப் பாருங்கடா..."

துப்பாக்கி ரவைகள் துளைத்தெடுக்கும் என்ற எச்சரிக்கை உணர்வோடு பலரும், என்ன ஆனாலும் சரி இனிப் பொறுப்பதில்லை என்று உள்ளத்தால் வேகப்பட்டு, உடம்பால் யந்திரப் பட்ட ஒருசிலரும், விலகியும், நெருக்கமாயும் நின்றபடி, சரமாரியாகக் கற்களை வீசுகிறார்கள். ஈனமுனங்கலாய் முனங்கி, கைகால்களை அறுபட்ட ஆடு போல் உதறிவிட்டு ஓய்ந்துபோன இரண்டு சடலங்களை கூட்டம் சூழ்கிறது. ரத்தம், கட்டி கட்டியாய் உறைந்து கிடக்கிறது. பீறிட்ட ரத்தத் துளிகள் நியாயம் தேடிகளின் கண்களிலும், வாய்களிலும் செம்புள்ளிகளாய் தோற்றம் காட்டுகின்றன. போலீஸாரை ஏசிய தமிழரசி, கலாவதியை கீழே வைத்துவிட்டு, இன்னொரு சடலத்தை இழுத்தபடி, காவல் படியில் கால் வைக்கிறாள். இதற்குள் கார்கள் வந்து நிற்கின்றன. அதிகாரிகள், அவற்றிலிருந்து குதிக்கிறார்கள் அவர்களுள் ஒருவர், தலைக்குமேல் கையெடுத்துக் கும்பிடுகிறார். தமிழரசி, இன்னும் "சுடுங்கடா! ஏண்டா ஒஞ்சிட்டீங்க. சுடுங்கடா" என்று கத்தியபடியே படிகளில் ஏறுகிறாள்.

குட்டாம்பட்டியில் நடந்த கொலையும், ஒரு அப்பாவிப் பெண்ணிற்கு சூடுபோடப்பட்ட சமூக விவகாரமும், இனிமேல் செய்தியாகாமல் இருக்கமுடியாது. அந்தச் செய்தி, செய்தியாளருக்கும்—காவல் நிலையத்திற்கும் இடையே

நிலவும் உறவின் அடிப்படையில், விமர்சன செய்தியாக அனுப்பப்படலாம். அரசியல் பத்திரிகைகள் அதற்கு வர்ணம் பூசலாம். சட்டசபையில், அரசு இதைக் குறைத்துக் காட்டலாம். எதிர்க்கட்சிகளைக் கூட்டிப் பேசலாம். நாளைக்கே, ஆயுதப் போலீசார் குட்டாம் பட்டிக்குள் சென்று, தங்களது தீராத தீரத்தைக் காட்ட 'பிளாக் மார்ச்' செய்யலாம். விசாரணைக் கமிஷன் நியமிக்கப்படலாம். வயிறு காய்ந்தவர்கள், கோர்ட் கோர்ட்டாய், வாய்தா வாய்தாவாய் அலையலாம். ஆனாலும் ..

இந்தச் செய்திக்குள் இருக்கும் சேதி எப்போதும் ஜோதி வடிவாய் சுற்றும். பூசி மழுப்பி பொங்கலிடப்பட்ட விவகாரம், செய்தியாவதற்கு இதுவரை மூன்று உயிர்கள் விலையாயின.

அந்தச் செய்தி மீது நடவடிக்கை எடுக்க எத்தனை உயிர்கள் தேவையோ? தர்ம நடவடிக்கை எடுக்கப்படுமா? 'தர்மத்திற்கு' என்று எடுக்கப்படுவதுபோல் எடுக்கப் படுமா...?

காலத்திற்கே வெளிச்சம். காலத்திற்கு வெளிச்சம் இருக்கிறதா?

காலத்திற்கு வெளிச்சம் மட்டுமல்ல, கஷ்டப்படுத் தியவர்களை கஷ்டப்படுத்தும் சக்தியும் உண்டு என்று வரலாறு கூறுகிறது. ஒரு தடவை சொன்னால், முரட்டு மூடர்களுக்குப் புரியாது என்று, பல தடவை, பல நாடு களில் பாடம் சொல்லிக் கொடுத்திருக்கிறது.

———




## பரிசு பெற்ற நூல்கள்

கம்பர் — டாக்டர் வ. சுப. மாணிக்கம்

வீரர் உலகம் — கி. வா. ஜகந்நாதன்

மணிக்கொடி காலம் — பி. எஸ். ராமையா

திருக்குறள் கூறும் உறுதிப் பொருள் —
டாக்டர் சோ. ந. கந்தசாமி

பரிபாடல் திறன் — டாக்டர் இரா. சாரங்கபாணி

உரையாசிரியர்கள் — மு. வை. அரவிந்தன்

ஊருக்குள் ஒரு புரட்சி — சு. சமுத்திரம்

தாகூர் — ச. மெய்யப்பன்



## சு. சமுத்திரம் எழுதிய நூல்கள்

காகித உறவு

உறவுக்கு அப்பால்

ஒரு சத்தியத்தின் அழுகை

வளர்ப்பு மகள்

ஊருக்குள் ஒரு புரட்சி

உயரத்தின் தாழ்வுகள்

இல்லந்தோறும் இதயங்கள்

சமுத்திரம் கதைகள்

Wrapper Printed by Karpakam Achakam, Madras-600 002.